# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 7 | ஜனவரி 10, 2022 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 7 | January 10th, 2022 | Annual Subscription Rs. 100/-



## இக்கணமே ஞானம்

பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"இந்த கணத்தில் நீங்கள் எப்படி (மனம் எப்படி இருக்கிறதோ) இருக்கிறீர்களோ அப்படியே ஏற்றுக் கொள்ளும் போது மனம் இலகுவாகிறது. விடுதலையில் இயங்குகிறது. இதைத்தான் சாஸ்திரத்தில் பக்தி, சரணாகதி என்று மறைமுகமான வழியில் சொல்கிறார்கள். இதை நாம் அறிவுப்பூர்வமாக சொல்கிறோம்.

# வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
# 3 நாள் ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம், **சேலம் ஸ்ரீ பகவத் பவனில்** நடைபெற உள்ளது.

நாள் : **25-2-22** காலை **9.00** மணி முதல் **27-2-22** மதியம் **3.00** மணி வரை

இடம் : **சேலம், ஸ்ரீபகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பைக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po), சேலம்.



செலவு பகிர்வு : ரூ. 5000/- நபருக்கு

**ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 24-2-22 வியாழக்கிழமை மாலைக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.**

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் குழந்தைகளையும் மற்றவர்களையும் அழைத்து வருவதை கட்டாயம் தவிர்க்க வேண்டுகிறோம்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளது.

ஞானமுகாமில் 75 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். எனவே 15-1-22 ஆம் தேதிக்குள் அவசியம் முன் பதிவு செய்ய வேண்டுகிறோம்.

**முன் பதிவுக்கு**

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை, ஆதார் Xerox Copy உடன் December Gnanamuhaam என Type செய்து Whatsapp அனுப்ப வேண்டிய எண் : **9942219065**

**வழித் தடம் :** Google Map-ல் Sri Bagavath Bhavan என Search செய்தால் Route Map கிடைத்து விடும். சேலம் ஜங்சன் இரயில் நிலையம் - புதிய பேருந்து நிலையம் - ஆத்தூர் வழி அயோத்தியாபட்டிணம் பஸ் ஸ்டாப் -பெரியகவுண்டாபுரம் செல்ல மினி பஸ் (அ) ஆட்டோ கிடைக்கும்.)

பெரிய கவுண்டாபுரம் - (கொடம்பக்காடு)
ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரம்.



தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கவும்.

(i) Single Bed Room - 8 மட்டும் உள்ளது.
(ii) Double Bed Room - 8 மட்டும் உள்ளது.

இதற்கு தனிக் கட்டணம் செலுத்த வேண்டுகிறோம். ஒரு அறையில் இணைந்து தங்குபவர்கள் இந்த கட்டணத்தை பகிர்ந்து (Sharing) கொள்ளலாம்.

குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் முன் பதிவு அவசியம். தொடர்புக்கு : **7904118421**

அன்புடன், **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-636003.
**9994205880, 9789165555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

# இக்கணமே ஞானம்

அன்பின் இனியவர்களே!

இது நமது ஞான முகாமின் முதலாவது நாள் - முதலாவது அமர்வு.

இதை நாம் சரியாகப் புரிந்து கொண்டோமென்றால், இந்த ஒரு வகுப்பே போதுமானதாகும். ஏனென்றால் இதில் பிரம்மாண்டம் என்று எதுவுமே இல்லை.

பொதுவாக ஆன்மிகத்தைப் பொறுத்தவரை ஞானம், முக்தி என்பவைதாம் உயர்ந்தவை. சாஸ்திரங்களும் அதையே கூறுகின்றன.

அதை அடைவது என்றால் என்ன? ஞானத்தை அடைவது, முக்தியை அடைவது என்றால் என்ன?

ஒவ்வொருவரும் பல விதமான பயிற்சி முயற்சிகளைப் பற்றி கூறுகிறார்கள். ரமணரை எடுத்துக்கொண்டீர்கள் என்றால் ஆன்மாவை தெரிந்துகொள்ளவேண்டும், ஆன்ம சாட்சாத்காரம் அடையவேண்டும் என்று கூறுவார்.

ஆன்ம சாட்சாத்காரம் அடைய என்ன செய்ய வேண்டும்? ஆன்மாவை நாம் நேருக்கு நேராக தரிசனம் பண்ணி தெரிந்து கொள்ள வேண்டுமா? -இப்படி சிலர் அவரிடம் கேட்டனர்.

அதற்கு அவர் ஆன்ம சாட்சாத்காரம் என எதுவுமே கிடையாது என்று சொல்லி கையை விரித்து விடுகிறார்.

இப்படித்தான் ஆன்ம சாட்சாத்காரம் அடையவேண்டும் என்று கூறி ஆரம்பிக்கிறார்கள். பிறகு அவர்களே ஆன்ம சாட்சாத்காரம் கிடையாது என்று கூறி இரண்டு நிலைப்பாடுகளை (Double Stand) எடுத்து விடுகிறார்கள்.

ரமணரிடம் ஒருவர் நாம ஜபத்தை பற்றிக் கேட்கிறார், நாம ஜபம் செய்வது எப்படி என்று கேட்கிறார்.

ஆன்மாவை அறிவது சுலபம் என்றுதான் ரமணரது ஸ்டேட்மண்ட் பொதுவாக இருக்கும். அவர் நாம ஜபத்தைப் பற்றி சொல்லும்போது ஒருவர் கேட்கிறார், "காலையில் கொஞ்ச நேரம், மாலையில் கொஞ்சம் நேரம் செய்தால் போதுமா?" என்று கேட்கிறார். அதற்கு ரமணர் "இப்படி டைம் டேபிள் போட்டு எல்லாம் நாம ஜபம் செய்ய முடியாது. நீங்கள் அகோராத்திரம் பண்ண வேண்டும்" என்கிறார்.

எல்லோருமே ஏதோ ஒரு வகையில் இரண்டு நிலைப்பாடுகளை (Double Stand) எடுத்து விடுவார்கள். முதலில் எளிது என்பார்கள். பிறகு மிகவும் கடினம் என்று கூறிவிடுவார்கள்.

நம் சாஸ்திரங்களில் பார்த்தோமானால் பதி, பசு, பாசம் என்று ஒரு விளக்கம் கொடுப்பார்கள். ஆன்மாவைப் பசு என்பார்கள், அது பாசத்தைச் சார்ந்து இருக்கிறது.

அது அப்படி பாசத்தை சாராமல் பதியைச் சார வேண்டும் என்கிறார்கள்.

இறைவனை எப்படி சார்வது?

இப்போது அவர்கள், இறைவனைப் பார்க்கவும் முடியாது, உணரவும் முடியாது என்று கூறி விடுகிறார்கள்.

என்னவென்று பார்த்தோமானால் முதலில் ஆசை காட்டுவார்கள். பின்பு அதை நிறைவேற்ற முடியாது என்று அவர்களே கை விரித்து விடுவார்கள்.

இப்போது நமக்கு கைவசம் இருப்பது, இந்த மாதிரி சாஸ்திரங்கள்தாம்.

அவற்றுக்கு ஒரு பிரதானமான முக்கியத்துவம் கொடுத்துதான் நமது ஆன்மிகப் பயணமே உள்ளது.

ஆனால் அவர்களுடைய இரட்டை நிலைப்பாட்டின் காரணமாக நாம் வேறு ஒரு பாதையைத் தேர்ந்தெடுக்க வேண்டியதாகி விட்டது.

எல்லாமே ஒன்றுதான். ஆனாலும் நான் கூறும் பாதை வேறு ஒரு பாதையாக இருக்கிறது.

இப்போது நாம் சென்னையில் இருந்து கன்னியாகுமரி போக வேண்டும். எந்தெந்த ஊர் வழியாக எல்லாம் போக வேண்டும் என்று கணக்குப் போட்டோம் என்றால் திருச்சி, மதுரை வழியாகப் போக வேண்டும் என்று சொல்லுவார்கள்.

இப்போது காரை எடுத்துக் கொண்டு போனோம் என்றால் திருச்சி வருகிறதா? மதுரை வருகிறதா? என்று கேட்டால்,

வருகிறது என்றும் சொல்லலாம். வரவில்லை என்றும் சொல்லலாம். ஏனென்றால் கார் பைபாஸில் செல்கிறது.

அதாவது diversion இல்லாமல் கடந்து செல்கிறது. அப்போது யாராவது மதுரை சென்றாயா? திருச்சி சென்றாயா என்று கேட்டால்?

நீ திருச்சிக்கே போகாமல் பின் எப்படி கன்னியாகுமரி சென்றாய் என்று கேட்டால் நாம் குழப்பம் அடைந்து விடுவோம்.

அதில் உண்மையும் இருக்கிறது, உண்மை இல்லாமல் இல்லை ஆனால் அது முழுமையான உண்மை இல்லை.

இப்படி எல்லாக் கூற்றிலும் உண்மை இருக்கிறது. பொய் கிடையாது, எல்லாமே சரிதான். ஆனால் அவற்றை "பைபாஸ்" வழியாக கடந்து சென்றால்தான் உண்மை நமக்கு நேரடியாக விளங்கும்.

உண்மையை மட்டும் பார்த்தீர்கள் என்றால் அது மிகவும் எளிமையான, சாதாரண ஒன்றாகத்தான் இருக்கிறது.

நீங்கள் எத்தனையோ சாஸ்திரங்களின் முக்கியத்துவத்தை அறிந்திருக்கலாம். எத்தனையோ தத்துவங்களை நீங்கள் படித்து இருக்கலாம்.

ஆனால் வெறும் ஒரே ஒரு மாதம் மட்டும், திருச்சி, மதுரையைப் போல் தள்ளிவைத்துவிட்டு, அதாவது சிறிது ஓரங்கட்டி வைப்பது போல வைத்துவிட்டு, நமது இந்தக் கருத்துகளுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்து பார்ப்பீர்கள் என்றால் உங்களுக்கு நேரடியாகவே விளங்கும்.

வெறும் ஒரு மாதம் மட்டும் இதைச் சரிவரத் தெரிந்து கொண்டீர்கள் என்றால் பிறகு அதற்கு அப்புறம் நாம் எதை வேண்டுமானாலும் பார்க்கலாம், தெரிந்து கொள்ளலாம்.

இங்கு நாம் பைபாஸில் செல்வது போல், நாம் என்ன சொல்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ள எவ்வளவு நேரம் தேவைப்படும் ?

பல வருடங்களாக என்ன புரிந்து கொள்ள வேண்டுமோ அதை நாம் இங்கு ஒரு மணி நேரத்தில் புரிந்து கொண்டு விடுவோம்.

இருந்தாலும் நமக்கு அது உறுதியானால்தான் (Confirmation) அது முழுமை அடையும்.

அதன் காரணமாகவே நாம் ஒரு மாதத்திற்கு மட்டும் மற்றவிதமான பயிற்சி முயற்சிகளிலிருந்து விலகி இருப்பது நல்லது. நாம் மற்ற கோட்பாடுகளையும், தத்துவத்தையும் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஒரு மாதம் மட்டும் விலகி இருப்பது நல்லது.

நாங்களும் ஆரம்பகாலத்தில் "ஆன்மா" போன்றவைகளைதான் தேடிக் கொண்டிருந்தோம். ஆன்மிகம் என்று சொன்னாலே ஞானம் அடைவது என்பதுதான் உயர்ந்தது என்று நினைத்துக் கொண்டிருந்தோம். ஞானத்துக்கும் விடுதலை (liberation) க்கும் வித்தியாசம் தெரியாது. ஞானம் தான் பிரதானமானது. ஞானம் அடைந்து விட்டால் விடுதலையடைந்த மாதிரிதான் என்று நினைத்துதான் நாங்கள் பிரயாணம் செய்தோம்.

நான் வழக்கறிஞராகச் செயல்பட்டதால் விடுமுறைக் காலத்தில்தான் மலைப் பிரதேசங்களுக்கு பயணம் செல்வோம். ஒருமுறை மழை காலம். பாபநாசம் மலையின் உயர்வான பகுதிக்குச் செல்வோம் என்று கூறி சாமியார் ஒருவர் அழைத்துச் சென்றார். அங்கு Lower Dam, upper Dam (கீழ் அணைக்கட்டு, மேல் அணைக்கட்டு) என்று இரண்டு இருந்தன.

நாங்கள் மேல் அணைக்கட்டுக்கும் மேலாகச் சென்றுவிட்டோம், அங்கிருந்துதான் தாமிரபரணி ஆறு உற்பத்தியாகி கீழ் அணைகளுக்கு வருகிறது. அப்போது அங்கு போகும்போது காட்டாறு அடித்துப் புரண்டு ஓடிக்கொண்டிருந்தது. அது நல்ல மழை காலம். பெரிய அருவி போல் அந்த ஆறு ஓடிக்கொண்டிருந்தது.

எங்களுடன் வந்த சாமியார் அப்போது ஒன்று கூறினார். "நேற்று தான் ஒரு குட்டி யானையை இந்த அருவியாறு அடித்துச் சென்றது" என்றார். உண்மையிலேயே பார்த்தால் அப்படித்தான் அந்த ஆறு இருந்தது, யாருமே கிட்ட நெருங்க முடியாத நிலையில் மிகப் பயங்கரமாக இருந்தது.

அந்த சாமியார், வேடிக்கை காட்டிவிட்டு எங்களை விட்டு விடுவார் என்று பார்த்தால், அவர் "நாம் இதில் இறங்கி குளிப்போமா?" என்றார்.

நாங்கள் அதை விளையாட்டாக எடுத்துக் கொண்டு பதிலுக்கு "சரி குளிப்போம்" என்று விளையாட்டாகப் பதில் கூறினோம்.

ஆனால் அவர் உண்மையாகவே எங்களைக் குளிக்கவே அழைத்திருக்கிறார். அவரும் குளிக்கும் முயற்சியில் இறங்க ஆரம்பித்து விட்டார். பிறகு நாங்களும் அந்த ஆற்றில் குளித்து முடித்துவிட்டு வந்தோம்.

அதிலும் சில நுணுக்கங்கள் இருக்கின்றன. நீர் வேகமாகப் போகும்போது, சில இடங்களில் பாறைகளில் மோதி, நீர் பின்னோக்கி வருகிறது.

இதனால் சில இடங்களில் நீரானது "தெப்பம்" போல் சமநிலையில் உள்ளது. அப்படி "தெப்பம்" போல் உள்ள இடங்கள் நிறைய காணப்பட்டன. அப்படி உள்ள இடத்தில் நாங்கள் நிதானமாக, சுலபமாக நீச்சலடித்து குளித்து வந்தோம்.

இதைப்போலவே காட்டாறு போல அமைந்துள்ள ஆன்மிகத்திலும், நாம் ஆனந்தமாக நீந்திக் குளிக்க ஒரு இடத்தை கண்டுபிடித்திருக்கிறோம்.

நாம் கண்டுபிடித்ததை எளிமையாகக் கொடுத்தாலும் அது மற்றவர்களிடம் சேரவும் சேராது. பலவித முயற்சிகள் செய்து பார்த்தவர்களுக்கு மட்டும்தான் அது விளங்கும்.

ஒருவர் காரை கண்முண் தெரியாமல் வேகமாக ஓட்டுகிறார் என வைத்துக் கொள்வோம். திடீரென்று ஒரு அவசரம். "சடன் பிரேக்" போடுகிறார். என்ன ஆகும் ?

திடீரென்று காரை நிறுத்தினால் அந்தக் கார் முன்னோக்கிச் செல்லாமல் அது உடனே அரைவட்ட மடித்து, பின்னோக்கித் திரும்பிவிடும்.

அவரிடம் வந்து காரை எப்படித் திருப்ப வேண்டும் என்று கேட்டால் என்ன சொல்வார்?

காரை வேகமாக ஓட்டுங்கள்; பின்பு சடன் பிரேக் போடுங்கள், வண்டி தாமாகத் திரும்பி விடும் என்றுதான் கூறுவார். அவர் சொல்லுவது முற்றிலும் உண்மைதான். ஆனால் அதனை யாருக்கும் ஆலோசனையாகப் பரிந்துரைக்க முடியாது.

ஸ்டியரிங் இருக்கிறது. அதனை மெதுவாக வளைத்தால் காரை பாதுகாப்பாகப் பின் நோக்கித் திருப்பி விடலாம்.

எல்லா உபதேசங்களிலும் இதுபோல் உண்மை இருக்கிறது.

வழக்கமாக புத்தரின் வாழ்க்கையையே இதற்கு ஓர் உதாரணமாக எடுப்போம். புத்தரும் தன் வாழ்க்கையில் ஞானத்தைத் தேடி அலைகிறார். எத்தனையோ குருமார்கள் அவருக்கு பயிற்சி கொடுக்கிறார்கள். அவரும் அதை தீவிரமாகப் பின்பற்றி வருகிறார். ஆனால் அவருக்கு ஞானம் கிடைத்ததாகத் தெரியவில்லை. அப்போது அவர் மனமுடைந்து சலித்து போகிறார். மனமொடிந்த நிலையில் அவர் ஒரு மரத்தடியில் அமர்கிறார். அந்த நிலையில் அவர் எதைத் தேடிவந்தாரோ அதனை அடைகிறார்.

முயற்சிகளின் மூலம் எதனைத் தேடினாரோ அது அவரது அனைத்து முயற்சிகளையும் கைவிட்ட நிலையில் அவருக்குக் கை கூடியது.

இப்போது இதனை அவர் எப்படி அடுத்தவருக்கு எடுத்துக் கூறுவார்.

அவருக்கும் அது மிகுந்த ஆச்சரியத்தை ஏற்படுத்தாமல் இல்லை. "அட என்ன இது இவ்வளவு எளிமையானதா! இவ்வளவுதானா!" என்று ஆச்சரியத்திலும் வியப்பிலும் மூழ்கிப்போயிருந்தார்.

என்னவெல்லாமோ செய்து பார்த்தும் கிடைக்காத ஒன்று, எதுவும் செய்யாது சும்மா அமர்ந்து விட்ட நிலையில் கிடைத்த ஒன்றை, எவ்வாறு போதிப்பது என்று சிந்திக்கிறார். பின் அவர் அதனை "நிர்வாண நிலை" என ஒன்று இருக்கிறது. அதை நான் கண்டேன், "ஆசையே துன்பத்திற்குக் காரணம்" என்று தன் போதனைகளை முன் வைக்கிறார்.

புத்தரால் பலன் அடைந்தவர்கள் பலர். ஆனால் அவர்கள் அனைவரும் ஞானத் தெளிவு பெற்றவர்களா என்று கூறமுடியாது.

இப்போது விஷயம் என்னவென்றால், "ஞானம்" என்பது மிகவும் சாதாரணமான ஒன்றுதான். ஆனால் அதனை நாம் தெரிந்து கொண்டது போலவே புரிந்து கொள்ளவும் வேண்டியது இருக்கிறது.

நாம் பிரம்மாண்டமான ஓர் இலக்கை அடைய வேண்டும் என்றால் எல்லோரும் படிப்படியாக முயற்சி செய்து அதனை அடைந்து விட முடியும். ஆனால் இப்போது இங்கு அதைபோல் அடையும் "அடை விடம்" ஒன்றுமே இல்லை.

புத்தரை எடுத்துக்கொண்டோமென்றால் புத்தரும் முயற்சி செய்தார். ஆனால் அந்த முயற்சியின் காரணமாகத்தான் அவர் அந்த நிலையை அடைந்தாரா? அந்த பலனை அடைந்தாரா? என்றால் அவ்வாறு கூற இயலவில்லை.

என்னையே ஓர் உதாரணமாக எடுத்துக் கொண்டோமானால் என்னுடைய முயற்சி பதினெட்டு வயதில் ஆரம்பித்தது. அது முடிய ஐம்பத்தெட்டு வயது ஆகிவிட்டது. கிட்டத்தட்ட நாற்பது வருடம் கழித்துதான் நான் ஞானம் அடைந்தேன். என்னவெல்லாமோ பயிற்சிகள் முயற்சிகள் செய்தோம்.

எங்களுக்கு என்ன தோன்றியது என்றால், பல தியானப் பயிற்சிகள் செய்யும் போது ஒரு பரவச நிலையைப் போல "ஆனந்த" நிலை ஏற்படும். அது சில மணி நேரங்கள் நீடிக்கும். பின் நின்று விடும். அந்த நிலை நிரந்தரமாக நீடிக்குமேயானால் அதுதான் ஞானநிலை என்று நாங்கள் எண்ணிக் கொள்வோம்.

அந்த ஆனந்த நிலையும், நான் முயற்சி செய்யச் செய்ய நீடிக்க ஆரம்பித்தது. ஒரு காலகட்டத்தில் பயிற்சியின் தீவிரத்தால் அந்த ஆனந்த நிலை என்னுடனேயே நிரந்தரமாகத் தங்கிவிட்டது. முன்பு போல வந்து விட்டு சிறிது நேரத்தில் மறைந்து விடவில்லை. கிட்டத்தட்ட ஒரு வருட காலம் அந்த ஆனந்தப் பரவச நிலை என்னுடனேயே தங்கிவிட்டது.

"அந்தப் பரவச நிலைகள் ஞானம் அல்ல. ஞானத்துக்கும் பரவச நிலைக்கும் சம்பந்தம் இல்லை" என்று யாருமே அன்று எங்களுக்குக் கூறவில்லை.

நான் ஞான நிலையை அடைந்து விட்டதாகவே நினைத்துக்கொண்டேன். ஏனென்றால் அந்த ஆனந்தப் பரவச நிலையில் எந்தப்

பிரச்சனையும் எனக்கு இல்லை. எத்தனையோ பிரச்சினைகள் வெளியுலகில் இருந்தாலும் அது என்னை ஒன்றும் செய்யாது. எனக்கு மனதளவில் எந்தக் கஷ்டமுமே இருக்காது.

ஒரு ஞானி எந்த நிலையில் இருப்பாரோ அந்த நிலையில்தான் நாம் இருக்கிறோம்; நாம் அடைய வேண்டிய நிலையை அடைந்து விட்டோம் என்ற எண்ணம் எனக்குள் தோன்றியது. அந்த ஆனந்த நிலை என்னிடம் நிலைபெற்று ஒரு வருடம் கழிந்து விட்டது. அதன் பிறகுதான் அதனுடைய சுயரூபம் எனக்குப் புரிய ஆரம்பித்தது. அது என் உடல் ஆரோக்கியத்தை மெதுவாகப் பாதிக்க ஆரம்பித்துவிட்டது. உண்மையிலேயே அந்த ஆனந்த நிலை, நல்ல நிலைதான் என்றால் நமது உடல் ஆரோக்கியம் அல்லவா மேம்பட வேண்டும்! ஆனால் இது கீழ் நோக்கி அல்லவா நம்மைத் தள்ளுகிறது!?

–இப்படி எனக்குள் சந்தேகம் எழுந்தது. இதற்கு விளக்கம் கூறவும், ஆலோசனை சொல்லவும் யாரும் கிடையாது. வேறு வழியின்றி அதிலிருந்து வெளியில் வந்தால்போதும் என்று சிறிது சிறிதாக அதிலிருந்து வெளியில் வந்தேன்.

அப்படி அந்த ஆனந்த நிலையிலிருந்து விடுபட்டபிறகு, ஒரு சாதாரண பிரச்சினை கூட என்னைப் பாதிக்க ஆரம்பித்து விட்டது. ஆனந்த நிலையின்போது எந்தப் பிரச்சினையும் பாதிக்கவில்லை. இப்பொழுது எல்லாமே என்னைப் பாதிக்கிறது. இனி நான் என்னதான் செய்வது என்ற–நிலையில், புத்தர் எல்லாவற்றையும் தூக்கி போட்ட மாதிரி, எந்தப் புகலிடமும் எனக்கு வேண்டாம் என ஒரு முடிவெடுத்தேன். அப்படி எல்லாவற்றையும் மொத்தமாகத் தூக்கிப் போட்டவுடன்தான் ஞானம் என்றால் என்ன என்பது புரிந்தது.

எனக்கு தெரிந்த பிறகுதான் இதற்கு முன் வாழ்ந்த எல்லா ஞானிகளும் இதனை ஏதோ ஒரு மொழியில் கூறியுள்ளார்கள் என்பதும் புரிந்தது.

அதன் பிறகுதான் நமக்குப் புரிந்ததை ஆய்வு செய்து அதனை எழுத்து வடிவத்தில் கொண்டு வந்தோம். அதனை மற்றவர்களுக்கு விளக்கவும் முடிந்தது.

எந்த சுதந்திரத்தை அனுபவித்தோமோ, அதே சுதந்திரத்தைதான் எல்லோரும் அனுபவிக்கிறார்கள். சாஸ்திரங்களில் என்ன சொல்லப்பட்டுள்ளதோ அதுதான் இது. இது சாஸ்திரங்களுக்கு விரோதமானது அல்ல. ஆனால் மொழி தான் மாறுபடுகிறது.

இதேபோல் ராமகிருஷ்ண பரமஹம்சர் ஒரு கதை கூறுவார். 'ஒரு குருடன்; குருடனின் பக்கத்து வீட்டில் ஒரு குழந்தை அழுகிறது. உடனே ஏன் குழந்தை அழுகிறது என்று அவர் கேட்கிறார். பால் குடிக்கும்போது புரையேறி விட்டது. அதனால் தான் குழந்தை அழுகிறது என்று பெற்றோர் கூறுகிறார்கள். பால் எப்படி இருக்கும் என்று அவர் கேட்கிறார். பால் வெள்ளையாக இருக்கும் என்று அவர்கள் கூறுகிறார்கள். வெள்ளை என்றால் என்ன என்று அவர் மறுபடியும் கேட்கிறார். வெள்ளை என்றால் அது கொக்கு மாதிரி இருக்கும் என்று அவர்கள் கூறுகிறார்கள். அவர் கொக்கு எப்படி இருக்கும் என்று கேட்கிறார். இப்படித்தான், இந்த மாதிரி வளைந்து இருக்கும் என்று அவரது கையைப்பிடித்து வளைத்து காட்டுகிறார்கள். "இப்படி ஒரு பொருளை இந்தப் பச்சைக் குழந்தைக்கு ஊட்டினால் அது அந்தக் குழந்தைக்கு விக்காமல் என்ன செய்யும்?" என்று அவர் கேட்கிறார்.

இந்த மாதிரிதான் ஞானம் என்பதும் ஒரு சாதாரணமான ஒன்றே. இதற்கு என்னவெல்லாமோ சொல்லிவிடுகிறார்கள். பாலையும் கை முஷ்டியையும் இணைத்தது போல் ஞானத்தோடு எவற்றையெல்லாமோ இணைத்து ஞானத்தை ஓர் எட்டாக் கனியாக்கி விட்டார்கள்.

எத்தனையோ விதமான மன இயல்புகள் நமக்கு இருக்கின்றன. இந்த மன இயல்புகள் எல்லாம் மாறினால் தான் சரியாக இருக்கும் என்று தான் எல்லா சாஸ்திரங்களும் கூறுகின்றன.

"ஒரு ஞானி என்றால் தாமரை இலை தண்ணீர் போல் இருப்பார். எப்போதும் அவர் மலர்ந்த முகத்துடன் இருப்பார்."

–இப்படிதான் அவரை வர்ணிக்கின்றன.

இதனை வைத்து நாம் நம்மை ஒப்பிடுகிறோம். நாம் மிகவும் கடுமையாக இருக்கிறோமே என்று நம்மை நாமே குற்றம் சாட்டுகிறோம். அப்படி என்றால், ஞானத்தை அடைய, இன்னும் ஏதோ ஒரு முயற்சி செய்ய வேண்டும் என நினைக்கிறோம். இப்படி உண்மையும் பொய்யும் கலந்து உள்ளது. இதில் எல்லோரும் பாதை காட்டும் போது இதைச் செய்; அதைச் செய்; இதை அடைந்து விடலாம், அதை அடைந்து விடலாம் என்று சொல்லும் பொழுது அது பொய்யாகவே தோன்றாது. உண்மையைப் போன்றுதான் தோன்றும். ஆனால் உண்மையிலேயே அங்கு ஒன்றுமே பண்ண வேண்டியது இல்லை. இல்லாத ஒரு இடத்தில் என்னவெல்லாமோ செய்வதற்கு ஏராளமான வழிகளைக் கொடுத்து விடுகிறார்கள். நாமும் ஆரம்பகாலத்தில் இருக்கிறவர்களுக்கு முயற்சி செய்யுங்கள் என்றுதான் கூறுகிறோம். அது தவறு கிடையாது. ஆனால் முடிவான நிலையில் எதைச் செய்தாலும் அது தவறுதான். எதுவுமே செய்யாமல் சும்மா இருப்பதுதான் சரி. சும்மா இருப்பதனால் மாற்றம் தானாகவே நடக்கிறது.

ஒரு ஊரில், ஒரு குளம் இருந்தது. அந்த ஊர் பண்ணையார் அந்தக் குளத்தில் குளிக்க முடியுமா

என்று பார்த்து வருமாறு ஒருவரைஅனுப்பி வைத்தார். வேலைக்காரன் குளத்தைப் பார்த்துவிட்டு மிகவும் கலங்கிப் போய் உள்ளது என்று பண்ணையாரிடம் கூறுகிறான். பண்ணையார் உடனே தன்னிடமுள்ள 100 வேலைக்காரர்களை அனுப்பி குளத்தைத் தெளிய வையுங்கள் என்று கூறுகிறார். வேறு எவரும் குளத்தில் இறங்காமல் வேலையாட்கள் குளத்தைக் கவனித்துக் கொண்டிருக்கின்றனர்.

பண்ணையார் சிறிது நேரம் கழித்து மற்றொருவரை அனுப்பி குளத்தைப் பார்த்து வருமாறு கூறுகிறார். அங்கு சென்றவர் எல்லோரையும் பார்த்து விட்டு, "யாருமே குளத்தைத் தெளிய வைக்க வில்லை; சும்மா தான் உட்கார்ந்து இருக்கிறார்கள்" என்று பண்ணையாரிடம் கூறுகிறார். "எல்லோரும் வேடிக்கை பார்த்துக்கிட்டு இருக்காங்க" என்று கூறுகிறார் .

இதே மாதிரிதான் நாமும் நம்முடைய இயல்பு எல்லாம் மாற வேண்டும் என்று அவசரப்பட்டு ஏதேதோ செய்கிறோம். உண்மையில், விட்டு விட்டால் எல்லாம் தானாகவே சரியாகி விடும். அனுபவங்கள் எதற்குமே ஆயுள் அரை வினாடிதான். அனுபவங்களை வைத்து தான் நல்லவன் அல்லது கெட்டவன் என்று நாம் முடிவு எடுக்கிறோம். உண்மையில் நாம் உணர்ந்த எல்லா அனுபவங்களும் முடிந்து போனவை தான்.

நிஜத்தில் அங்கு எதுவும் இல்லை. சரி செய்ய வேண்டிய அவசியமும் இல்லை. நாம் நிறைய கற்பனைகள் வைத்திருக்கிறோம். ஏதோ ஒரு புனிதமான நிலை- நல்ல நிலை என்று நாம் வைத்திருக்கும் கற்பனையுடன் நம்முடைய அனுபவங்களை ஒப்பிட்டு நாம் நம்மைச் சரியில்லை என்று சரி செய்ய முயற்சி செய்கிறோம். உண்மையில் நாம் அங்கு செய்வதற்கு எதுவும் இல்லை என்றுதான் நாம் முடிவு எடுக்க வேண்டும். நாம் செய்வதற்கு எதுவுமே இல்லை என்று முடிவெடுத்த பிறகு நமக்கு அங்கு என்ன வேலை இருக்கிறது? ஆனால் இது மாதிரி முடிவுக்கு வருவது பல்வேறு முயற்சிகள் செய்து தோற்றுப்போன பிறகு இந்த முடிவுக்கு வந்தால்தான் அது செயல்படும். எடுத்த உடனே நாம் செய்வதற்கு எந்த வேலையும் இல்லை என்று சொன்னால் அவர்கள் இதற்குப் பதிலாக வேறு ஏதாவது ஒன்றைச் செய்து விடுவார்கள்.

முதலில் நாம் பல்வேறு முயற்சிகள் செய்து பார்த்துவிட்டு அது முடியவில்லை என்று தெரிந்து விட்டதற்கு அப்புறம்தான் இதில் நாம் செய்வது சரியில்லை என்று நமக்கு ஒரு திருப்பம் ஏற்படும். இல்லையென்றால் நாம் முயற்சி செய்து சாதிக்க வேண்டும் என்றுதான் தோன்றும். உண்மையில் முயற்சியைக் கை விடுதல் தான் அங்கு பிரதானமாக உள்ளது. முயற்சி செய்வதற்கு நாம் வழிகாட்டலாம் முயற்சியைக் கைவிடுவதற்கு நாம் என்ன வழி காட்டுவது ?

முயற்சி தவறானது என்று புரிய வைத்தால் போதும். முயற்சி செய்வது என்றால் இதைச் செய், அதைச் செய் என்று வழிகாட்டலாம். முயற்சியைக் கைவிடுவதற்கு ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. இதைத்தான் நாம் ஞானம் என்று கூறுகிறோம். நீங்கள் அங்கு எந்த வேலையும் செய்யவில்லை என்பதால் உங்களது மன இயக்கம் அப்படியே நின்று போவதில்லை. எல்லாம் தானாக இயங்கும். நாம் இயக்காமல் அது அதுவாகவே இயங்குகிறது. ஆற்று நீரை ஓட வைப்பதற்கு நாம் எதுவும் செய்ய வேண்டியது இல்லையோ, அது போல தான் இதுவும். அது அதுவாக இயங்கும்.

நாம் நம்முடைய முயற்சியைக் கைவிடும் போது - நாம் எந்த முயற்சியும் செய்யாத பொழுது - நாம் எதை அடைய நினைத்தோமோ அந்த இடத்திற்கு தானாக வந்து சேர்ந்து விடுகிறோம்.

இப்படி நாமாகச் செய்வதற்கும், தானாக இயங்குவதற்கும் இடையில் ஒரு புரிதல் (Understanding) உள்ளது.

நமக்கு அங்கு வேலை இல்லை என்று புரிந்து கொள்வது தான் அது. நம்முடைய இயக்கம் அனைத்தையும் தானாக இயங்க விட்டுவிடுகிறோம். அது அதுவாக இயங்குகிறது என்று நாம் புரிந்து கொள்கிறோம்.

நாம் புரிந்துகொண்டதற்கு சாட்சியாகதான் விடுதலையைக் கூறுகிறோம். நீங்கள் உங்கள் முயற்சியைக் கீழே விட்ட உடனேயே உங்களுடைய மனம் சுதந்திரம் அடைந்த ஓர் உணர்வை நீங்கள் உணரலாம். அந்த உணர்வை வைத்து, நாம் புரிய வேண்டியதைச் சரியாகப் புரிந்து கொண்டுவிட்டோம் என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

அப்படி இல்லாமல் நம் மனம் அப்படி இருக்க வேண்டும், இப்படி இருக்க வேண்டும் என்று எதிர்பார்த்தால் நாம் மீண்டும் முயற்சியைத்தான் தொடர்கிறோம் என்று அர்த்தம். எனவே ஆன்மிகத்தைப் பொருத்தவரை - ஞானத்தைப் பொருத்தவரை நமக்கு அங்கு எந்த வேலையும் இல்லை என்று முடித்துக் கொண்டோம் என்றால் நம் தரப்பு வேலையை நாம் கீழே போட்டுவிடுகிறோம். இதைத்தான் நாம் அகம்-புறம் என்று பிரித்துக் கொண்டோம். அகத்தில் நாம் செய்வதற்கு எந்த வேலையும் இல்லை. புறத்தில் மட்டும்தான் நாம் செய்வதற்கு பல வேலைகள் உள்ளன. நாம் அகம் என்றால் என்ன, புறம் என்றால் என்ன, விடுதலை என்றால் என்ன என்பதைத்தான் முக்கியமாகக் கூறுகிறோம். நம்முடைய நோக்கம் ஞானம் என்றால்

என்ன, முக்தி என்றால் என்ன என்பதைத் தெரிந்துகொண்டால் மட்டும் போதும்.

இங்கு தெரிந்து கொள்வது மிகவும் அவசியம். தெரியாமல் இருந்து விட்டோம் என்றால் நம்மை அறியாமலே ஏதோ ஒன்றை எதிர்பார்த்து அதனை அடைய முயற்சி செய்வோம். ஏனென்றால் எதையாவது ஒன்றை செய்து அடைந்துதான் நமக்குப் பழக்கம். அதனால் நாம் அடையவேண்டிய ஒரு பொருளாகத்தான் ஞானத்தையும் விடுதலையையும் எடுத்துக்கொள்கிறோம். உண்மையிலேயே அங்கு அடைவதற்கு ஒன்றும் இல்லை. அது விடுதல் தான். அது அடைதல் அல்ல. நீங்கள் விட்டுவிட்டால் விடுதலை; பிடித்துக் கொண்டால் பந்தம்.

ஞானிகளைப் பற்றி அவர்கள் எப்படி இருப்பார்கள் என்று சில கற்பனைகளை வைத்துள்ளோம். அவர்களை மாதிரி நாமும் அந்த நிலைக்குப் போக வேண்டும்; அவர்களுடைய மன இயக்கம் எப்படி இயங்குகிறதோ அதே மாதிரி நம்முடைய மன இயக்கமும் மாறவேண்டும் என்று கற்பனை வைத்திருக்கிறோம். அந்த கற்பனையையும் நம்மையும் பொருத்திப் பார்த்து அதற்கும் நமக்கும் என்ன குறைபாடு இருக்கிறது, அதை அடைவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பது மாதிரி நம்முடைய செயல்பாடுகளை மேம்படுத்திக் கொண்டு இருக்கிறோம்.

ஒருவர் இப்படிக் கூறுகிறார், மற்றொருவர் அப்படிக் கூறுகிறார் என்று நம்முடைய முயற்சியை நாம் பல்வேறு வகையில் செய்து பல அனுபவங்கள் கிடைக்கும்போது ஞானத்தை நெருங்கிவிட்டோம் – அடைந்து விட்டோம் என்பது போன்ற ஒரு திருப்தி நமக்கு ஏற்படுகிறது.

அது கொஞ்ச நேரம் தான். மறுபடியும் நம்முடைய பிரச்சனை ஆரம்பமாகிவிடும். உண்மையில் பார்த்தால் ஞான நிலை என்பது அகத்தைப் பொருத்தவரையில் – ஆன்மிகத்தை பொறுத்தவரையில் – விடுதலையை பொருத்தவரையில் நமக்கு எந்த வேலையும் இல்லை என்ற முடிவுக்கு வருவதுதான்.

மேலும் இப்படி நாம் முடிவுக்கு வர வேண்டும் என்றால் அதனை விசாரித்து ஆராய்ந்து தான் முடிவுக்கு வரமுடியும்.

சிறந்த அனுபவங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தோம் என்றால் உண்மையைத் தவற விட்டு விடுவோம்.

அகத்தைப் பொறுத்தவரையில் – ஞானத்தைப் பொறுத்தவரையில் – முக்தியைப் பொறுத்தவரையில் நம்முடைய இயக்கம் என்று எதுவும் கிடையாது.

இயக்கம் அனைத்தும் இயற்கையான இயக்கமே. இயற்கையான இயக்கம் தன்னைத்தானே புதுப்பித்துக் கொள்ளும். தன்னைத்தானே சீரமைக்கக் கூடிய ஆற்றலும் அதற்கு உள்ளது.

ஆறு சென்றுகொண்டிருக்கும் போது சில ஊர்களில் சாக்கடையையும் ஆற்றில் விட்டுவிடுவார்கள். ஆனால் அந்த ஆறு அப்படியே ஓடிக்கொண்டிருக்கும்போது அடுத்த ஊர்களில் கோயில் அபிஷேகத்திற்கும் அந்த ஆற்றில் இருந்து தான் தண்ணீர் எடுப்பார்கள். உண்மையிலேயே அது ஓடும் போது சுத்தமாகிவிடும். நாம் சாக்கடை எல்லாம் கலக்கிறது என்று நினைக்க வேண்டியதில்லை. இருந்தாலும் அடித்துக்கொண்டு போய்விடும். அது மாதிரி தான் நம்முடைய மனதும் இயற்கையாகவே ஒரு ஆறாகத் தான் இருக்கிறது.

ஆனால் நாம் அதை ஒரு குளமாக மாற்ற வேண்டும், ஒரு டேம் கட்டி ஒரு நல்ல நிலையாக வைத்திருக்க வேண்டும் என்று நம்மை நாமே புண்படுத்திக் கொள்கிறோம். அகத்தைப் பொறுத்த வரையில் நல்ல நிலை என்று ஒரு நிலையே கிடையாது. எல்லாமே தானாகச் சென்று விடும்.

இதே மாதிரி தான் கோவையிலுள்ள ஒரு பெண் தன் முற்பிறவியில் ராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடராக இருந்ததாக கூறினார். அவருக்கு திடீரென்று ஒருவித பரவசநிலை ஏற்படும். அவர் தவம் தியானம் பண்ணியதே கிடையாது. இயற்கையாகவே அவருக்கு அந்த மாதிரி சில அனுபவங்கள் ஏற்படும்.

ஒரு முறை அவர் என்னைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். ”இப்படி ஒரு பரவச நிலை ஏற்படுகிறது ஐயா...

”அது ஏற்படும்பொழுது நானே கடவுளாக இருக்கிற மாதிரி எனக்கு ஒரு உணர்வு ஏற்படுகிறது. இதைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்” என்று கேட்டார்.

இது ஓர் உயர்ந்த நிலைதான் அம்மா. சந்தேகமே இல்லை. இந்த மாதிரி ஒரு நிலையை அடைவதற்கு நிறைய தவ முயற்சிகள் எல்லாவற்றையும் பண்ணவேண்டும். அந்த மாதிரி செய்தால்தான் இதுவெல்லாம் கிடைக்கும். ஆனால் நீங்கள் எந்த முயற்சியும் செய்யாமல் இந்த மாதிரி உங்களுக்கு இயற்கையாகவே கிடைத்தது என்றால் அது உங்கள் பிறவியின் சிறப்புதான் காரணம்.

ஆனால் அதே நேரத்தில் உங்களுக்கு இந்த நிலைக்குப் பதிலாக வேறு ஏதாவது ஒரு மோசமான உணர்வுகளான பயமோ, வருத்தமோ, கோபமோ அல்லது வேறு ஏதாவது ஒரு அருவருப்பான உணர்வுகளோ இப்படி ஏதாவது ஒன்று ஏற்பட்டது என்றால் அந்த உயர்வான அனுபவத்துக்கும் இந்த உணர்வுகளுக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது. அகத்தைப் பொறுத்தவரையில் எல்லா

உணர்வுகளும் ஒன்று தான். அங்கு எந்த உணர்வு வந்தாலும் வந்து விட்டுப் போய் விடும். நல்ல உணர்வு என்று நீங்கள் பிடித்து வைத்தாலும் போற்றிப் புகழ்ந்தாலும் அது உங்களை –உங்கள் உடல்நிலையை சிக்கலாக்கி விடும். அதனால் அதை அதன் போக்கில் விட்டு விடுவதுதான் ஒரு புனிதமான நிலை சரியான நிலை.

ஒரு நல்ல அனுபவம் என்று அனுபவத்தில் உயர்ந்தது, தாழ்ந்தது பார்க்கக்கூடாது. மோசமான அனுபவம் வரலாம், நல்ல அனுபவம் வரலாம். எல்லாவற்றுக்கும் வித்தியாசம் கிடையாது. எல்லாமே வரவேண்டும் போகவேண்டும். இப்படித்தான் அவர்களுக்கு சில அனுபவங்களால் உடல்நிலை பாதிக்கப்பட்டு இருந்தது. நல்ல அனுபவம் என்று எதையாவது பிடித்து வைத்தாலும் உடல்நிலை பாதிக்கும்.

ஏனென்றால் உடல் அப்படித்தான் அமைக்கப்பட்டிருக்கிறது. எந்த அனுபவத்தையும் தக்க வைத்துக் கொண்டால் அது உடலை பாதிக்கும். எல்லா அனுபவங்களும் உடலில் ஏற்படுகின்ற இரசாயன மாற்றம்தான் (Chemical Reaction). இரசாயன மாற்றத்தால் தான் ஏதோ ஒரு அனுபவம் கிடைக்கிறது. இரசாயன மாற்றம் திரும்பத் திரும்ப ஏற்பட்டால் அது உடலை பாதித்துவிடும்.

உண்மையில் எல்லாமே வந்து விட்டுப் போய்விட வேண்டும். அவை எதிலும் ஒரு தேக்க நிலை இருக்கக்கூடாது. நீங்கள் எந்த சாஸ்திரத்தை எடுத்துக் கொண்டாலும் எதையாவது அடைதல் என்று தான் நமக்கு வழிகாட்டல் உள்ளது. அடைதல் என்ற மொழியே தவறு. விடுதல் என்ற மொழி தான் சரியானது. ஆனால் விடுதல் என்றால் யாருக்கும் புரியாது.

விடுதல்தான் சரியானது என்று நாம் கூறினாலும்,

விடுதல் என்பதை நான் எப்படி அடையவேண்டும் என்றுதான் கேட்பார்கள்.

”எனக்கு மோசமானதெல்லாம் இருக்கு, நான் ஒரு நல்ல நிலைக்குப் போக வேண்டாமா? ஞானிகள் எப்பவும் எவ்வளவு நல்ல நிலையில் இருக்கிறார்கள். அதனை அடைதல் எப்படி தப்பாகும்?

– இப்படித்தான் இயற்கையாக எல்லோருக்கும் தோன்றும். நாமும் ஞானத்தை அடைதல் என்கிற மொழியை பயன்படுத்திதான் சொல்கிறோம். ஏனென்றால் அப்படித்தான் புரிய வைக்க வேண்டியிருக்கிறது. விடுதல் என்ற மொழியைப் பயன்படுத்தி எப்படிப் பேசுவது? ”ஞானத்தை விடுவதற்கு வாருங்கள்” என்று பேச முடியுமா? ஞானத்தை அடைய வாருங்கள் என்றுதான் சொல்ல முடியும். ஆனால் ஏதோ ஒரு வகையில் அந்த மொழி அப்படி இருக்கிறது. ஆனால் அதனுடைய உண்மையான பொருள் விடுதல் என்பதுதான். விடுதல் என்பதில் விடுகிற வேலை கூட நமக்குக் கிடையாது. அதுவாகவே ஆறு மாதிரி ஓடிக்கொண்டே இருக்கிறது. அடைவதற்கு எதுவும் இல்லை என்ற ஒரு தீர்க்கமான முடிவுக்கு வருவதுதான் நாம் செய்ய வேண்டியது.

அப்படி ஒரு முடிவுக்கு வந்துவிட்டால் உங்களுடைய மொத்த இயக்கமும் அதுவாக இயங்குகிறது. ஒரு ஆறு சுத்தமாகவும் புனிதமாகவும் இருக்கின்ற மாதிரி நம்முடைய மனமும் புனிதமாகவும் சுத்தமாகவும் மாறிவிடும் .

அங்கு எதுவுமே தங்குவதில்லை.

அறிவுதான் ஏதாவது ஒரு நிலையை உருவாக்குகிறது.

குழந்தையைப் பார்த்தீர்கள் என்றால் அதற்கு அறிவு அந்த அளவுக்கு இருக்காது. அறிவின் அழுத்தம் இல்லாததால் அதனுடைய செயல்பாடுகள் எல்லாம் அழகாகவே இருக்கும். என்ன செய்தாலும் அது பார்த்து ரசிப்பது மாதிரி இருக்கும். எதையுமே அடையத் தேவையில்லை என்ற முடிவுக்கு வந்து விட்டோம் என்றால், அறிவு அங்கே ஒதுங்கி விடுகிறது. அந்த இயக்கம் அறிவின் குறுக்கீடு இல்லாத இயற்கையான இயக்கமாகிவிடும். அந்த இயற்கையான இயக்கத்தில் எல்லாமே தன்னைத் தானே சரிசெய்து கொள்கிறது. அப்பொழுது விடுதலை இயற்கையாகவே ஏற்படுகிறது. இதில் பயிற்சி செய்வதற்கு ஒன்றுமே கிடையாது.

நாம் கார் ஓட்டக் கற்றுக் கொள்கிறோம். அப்பொழுது ஆக்சிலேட்டரை அழுத்தினால்தான் வண்டி ஓடும் என்றும் ஸ்டேரிங்கைத் திருப்பினால் வண்டி திரும்பும் என்றும் தெரிந்துகொள்கிறோம். இப்படித் தெரிந்து விட்டதால் நாம் வண்டியை ஓட்டி விட முடியாது. அதில் எல்லாவற்றையும் நாம் ஆப்பரேட் செய்யும் போதுதான் ஆப்பரேட்டிங் சிஸ்டம் நமக்குத் தெரியும். இதே மாதிரி தான் நாம் நிறைய தவறுகள் செய்து அவற்றின் மூலம் பலவற்றைத் தெரிந்து வைத்துள்ளோம். அவை எல்லாமே நம் உதவிக்கு வரும். இதுவெல்லாம் பண்ணக்கூடாது; பிரச்சனையைக் கொடுக்கும் என்று தெரிந்துகொண்டு ஒரு முடிவு எடுக்கும் போது அது நமக்கு உதவி செய்யும் .

நாம் பல்வேறு முயற்சிகளைச் செய்து பார்த்துவிட்டு எல்லா முயற்சியும் நம்மை ஆசை காட்டி மோசம் செய்கிறது என்றும், ஏதாவது ஒன்றைக் கொடுப்பது போல் கொடுத்து நம்மை ஏமாற்றுகிறது என்றும் புரிந்து கொள்கிறோம்.

அங்கு ஒன்றுமே செய்யத் தேவையில்லை என்று அறிவுபூர்வமாக முடித்துக்கொண்டோம்

என்றால் நம்முடைய மன இயக்கம் அதுவாக செயல்பட ஆரம்பித்துவிடும். அதுவாக இயங்குவதை நாம் உணரமுடியும். அதுவாக இயங்கும் போது நம்முடைய மனப் பாரம் எல்லாம் குறைந்துவிடும். அதுவரை நாம் சுமந்து கொண்டிருந்த 'அதை அடைய வேண்டும் இதை அடைய வேண்டும், அப்படி மாற வேண்டும், இப்படி மாற வேண்டும்' என்ற எல்லாச் சுமைகளையும் கீழே இறக்கி வைத்து விடுவோம். பாரம் இல்லை என்றால் நாம் மேலே எழும்பி விடுவோம்.

இதில் நாம் புரிதலை உறுதிப்படுத்துதல் என்பதும் மிகவும் முக்கியமான ஒன்றாக வைத்துள்ளோம். நாம் ஞானம் அடைந்தாலும் அதைத் தக்க வைத்துக் கொள்வது என்று முடிவெடுத்தால் கூட அது தவறாகிவிடும்.

மொத்தத்தில் அகத்தைப் பொறுத்தவரையில் – ஆன்மிகத்தை பொருத்தவரையில் எதிர்காலம் என்ற ஒன்று இருக்கவே கூடாது. நாம் எப்படி இருக்கிறோமோ அதுதான் உண்மை. இந்த கணத்தில் நாம் எப்படி இருக்கிறோமோ அதுதான் உண்மை.

கடையில் சென்று ஒரு மிக்ஸி வாங்குகிறோம். கடைக்காரர் அதனை இயக்கிக் காட்டுகிறார். அது நன்றாகவே செயல்படுகிறது. நாம் வீட்டிற்கு வந்து இரண்டு நாள் நன்றாக ஓடிய பிறகு மூன்றாவது நாள் ரிப்பேர் ஆகிவிட்டது என்று வைத்துக்கொள்வோம். சரியில்லை என்று கூறி கடைக்கு எடுத்துச் செல்லுகிறோம். வேறொரு மிக்சியைக் கொடுத்து கடைக்காரர் அனுப்புகிறார். இதுதான் சாதாரண நடைமுறை.

இதே மாதிரி ஒரு ஏலக் கடையில் ஒரு காரை ஏலத்தில் வாங்குவதாக வைத்துக்கொள்வோம். நாம் வாங்கி வந்த கார் இரண்டு நாட்களுக்குப் பிறகு சரியாக ஓடவில்லை என்று கூறி மீண்டும் கொண்டு போய்க் கொடுக்க முடியாது.

ஏனென்றால் ஏல விற்பனைக்கான விதி முறைகள் வேறு. அதன் குறைநிறைகளோடு விற்கிறேன் என்றுதான் அவர் விற்கிறார். அப்படியேதான் நாமும் வாங்கியுள்ளோம்.

**இதுபோல் நாமும் நம்முடைய குறைநிறைகளோடு நம்மை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும். நம்முடைய குறையை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு விட்டோம் என்றால் அது தானாகவே சரியாகிவிடும்.**

இது நல்லா இருக்க வேண்டும்; இப்படி இருக்க வேண்டும், அப்படி இருக்க வேண்டும் என்று எந்த நிபந்தனைகளையும் போடக்கூடாது.

என்னுடைய இயல்பு கொஞ்சம் மாறினால் பரவாயில்லை என்று எதுவுமே இருக்கக் கூடாது. **இந்தக்கணத்தில் நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே உங்களை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்கிற ஒரு முடிவுக்கு வருவதைத் தான் நாம் ஞானம் என்று கூறுகிறோம்.**

மனப்பூர்வமாக உங்களை நீங்கள் ஏற்றுக் கொண்டு விட்டதால் உங்கள் இயல்புகள் அப்படியே இருக்காது. அவை மாறிக் கொண்டேதான் இருக்கும் . ஒரு ஆறு ஒரே மாதிரி தான் இருக்கும். ஆனால் அது கணம் தோறும் புதிது. அதே மாதிரி நாமும் ஒரு ஆற்றைப் போன்றவர்கள்தாம் என்று முடிவுக்கு வந்து விட வேண்டும்.

முடிவெடுப்பதுதான் இங்கு முக்கியம். அப்படி முடிவுக்கு வருவதற்கு முன்பு பல முயற்சிகள் செய்து தோல்வி அடைந்திருக்க வேண்டும்.

அவ்வாறில்லாமல் சும்மா நம்மை ஏற்றுக் கொண்டு பார்ப்போம் என்று கொஞ்ச நேரம் முடிவெடுக்கலாம். அது உண்மையான முடிவாக இருக்காது. ஏற்கெனவே பல்வேறு முயற்சிகளைச் செய்து அனுபவப்பட்டவர்களுக்குதான் இந்த முடிவு பயன்படும். ஆனால் நாம் ஞானம் என்கிற தலைப்பில் புரிந்து கொள்ள வேண்டியது இவ்வளவுதான். நீங்கள் இந்த கணத்தில் எப்படி இருக்கிறீர்களோ உங்களை அப்படியே மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதுதான் ஞானம். அப்படியே ஏற்றுக்கொள்வது என்பது இதை உங்களுடைய நிலையை அப்படியே நிரந்தரமாக வைத்துக் கொள்வது அல்ல.

உங்களைச் சுதந்திரமாக விடுவதுதான் இது.

தண்ணீரை நாம் எவ்வளவுதான் எத்தனை பாத்திரத்தில் மாற்றினாலும் அது அதனுடைய எந்த வடிவத்தையும் பற்றிப் பிடிக்காது. நிலையற்ற வடிவம்தான் அதனுடைய சுயநிலை.

அதே மாதிரி நம்முடைய மனமும் எந்த வடிவத்திற்குச் சென்றாலும் அது தனது சுய நிலைக்குத் திரும்பி விடும்.

அதன் சுதந்திரத்தை நாம் ஒன்றும் செய்ய முடியாது. அந்த மாதிரி அந்த மனம் சுதந்திரம் அடைந்து அது தன்னைத் தானே சரி பண்ணிக் கொள்ளும். சுதந்திரத்தைக் கொடுக்கும்போது, அது ஓர் இலகுவான நிலையை அடைந்து விடுகிறது. அந்த இலகுவான நிலையைத் தான் நாம் விடுதலை என்று கூறுகிறோம். விடுதலை என்பது எந்த அழுத்தமும் இல்லாத ஒரு தன்மை. பொறுப்புகள் எல்லாமே அழுத்தத்தைக் கொடுக்கும்.

அதனால் ஞானத்தை அடைய வேண்டும் என்ற பொறுப்பு கூட நமக்கு வேண்டாம்.

இந்தக் கணத்தில் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே ஏற்றுக்கொள்ளும்போது எல்லா நோக்கமும் போய்விடும். இதைத்தான் சாஸ்திரத்தில் பக்தி – சரணாகதி என்று மறைமுகமான வழியில் சொல்கிறார்கள். இதை நாம் அறிவுபூர்வமாகக் கூறுகிறோம். ★

# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் இந்த சக-பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் ஆங்கில புத்தாண்டு நல்வாழ்த்துகளையும் பொங்கல் நல்வாழ்த்துகளையும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் சார்பாகவும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாகவும் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஞானப்புரிதலைப் புரிந்து கொண்ட நம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நாளும் புதிய நாளே.

**வருகின்ற ஒவ்வொரு நாட்களிலும் புரிதலின் துணைகொண்டு புண்ணியமான செயல்கள் செய்து புனிதமாகப் பிரவகிப்போமாக!**

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, நமது ஸ்ரீ பகவத் பவனில் டிசம்பர் 24ஆம் தேதி முதல் 26ஆம் தேதி வரை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞானமுகாம் சிறப்பாக நடைபெற்றது. இதில் 75 அன்பர்கள் கலந்துகொண்டு பயன் அடைந்தார்கள். ஞானத் தேடல் உள்ள அன்பர்கள் அனைவருக்கும் ஞானமுகாம் மிகவும் பயனுள்ள வகையில் அமைந்துள்ளது.

வாழ்வில் ஏற்படும் பிரச்சனைகளாலும் போராட்டங்களாலும் ஏற்படும் மனத் துன்பத்தில் இன்னல் படுவோர் பலர்.

எவராக இருந்தாலும் ஞானமுகாம்களில் கலந்து கொண்டு இல்லம் திரும்பும்போது மனபாரம் குறைந்து மலர்ந்த முகத்துடன் விடை பெற்றுச் செல்கிறார்கள்.

**நமது ஞானமுகாம், இறுகிய மனங்களையும் இலகிய உள்ளங்களாக இயற்கையாகவே மாற்றி விடுகிறது. இதனை நாம் கண்கூடாகவே உணர முடிகிறது.**

அதனால்தான் மனித குலத்திற்கு தேவையான இந்த ஞானப்புரிதலை, உலகம் முழுவதும் கொண்டு செல்வதையே நோக்கமாகக் கொண்டு நமது ஸ்ரீ பகவத் மிஷன் செயல்பட்டு வருகிறது.

**ஞான முகாமில் ஸ்ரீ பகவத் அய்யா அவர்களின் உரை கேட்கும் இக்கணமே ஞானம் பெறும் வகையில் மிகவும் எளிமையாக அமைந்திருந்ததால் அதனை எழுத்து வடிவமாக அய்யாவின் கட்டுரையாக இம்மாத இதழில் வெளியிட்டு உள்ளோம். இக்கட்டுரையைத் தேடுதல் உள்ள அனைவருக்கும் பகிர்ந்து அனைவரையும் பயன் பெறச் செய்ய வேண்டுகிறோம்.**

நமது ஞான முகாமை ஒவ்வொரு ஊர்களிலும் நடத்த வேண்டும் என்பது நமது விருப்பம். ஆர்வமுள்ளவர்கள் இதற்கான பொறுப்பை எடுத்து செயல்படும்போது அவர்களுக்கு வழிகாட்ட நாங்கள் தயாராக இருக்கிறோம்.

மேலும் வருகின்ற பிப்ரவரி மாதம் 25, 26, 27 ஆம் தேதிகளில் மீண்டும் ஓர் ஞான முகாம் சேலம் ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

வாய்ப்புள்ளவர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கின்றோம்.

ஞான முகாம் பற்றிய விபரங்கள் இவ்விதழில் கொடுக்கப்பட்டுள்ளன.

மேலும் டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற ஞான முகாமில் 2022 வருடத்திற்கான புதிய காலண்டரை அய்யாவின் கருத்துகளோடும் வண்ண புகைப்படங்களுடனும் வெளியிட்டுள்ளோம். தேவையானவர்கள் வாங்கி பயன்பெறலாம்.

## நிகழ்ச்சி நிழல்கள்



